ஸ்ரீ

# ரமணசற்குருமாலை
# ரமணதேவமாலை
# விண்ணப்பம்.








மு. சிவப்பிரகாசம்பிள்ளை
இடையன்பாற்சொரி



# ரமணசற்குருமாலை
# ரமணதேவமாலை
# விண்ணப்பம்







இவை

இடையன்பாற்சோரி,

மு. சிவப்பிரகாசம் பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டு

திருவண்ணுமலை

ஸ்ரீ ரமணாச்ரமம் ஸர்வாதிகாரி

நிரஞ்சனநந்த ஸ்வாமிகளால்

பிரசுரிக்கப்பட்டன,

1944.

விலை அணு 0—4—0

# முகவுரை.

ஸ்ரீ ரமணபக்தருட் பழையவரும் விழுமியருமா மொருவரின் பழுத்த விதயத்துப் பக்தி மிகுதியாற் பொங்கி வழிந்தவையா மிந்நூலின் பாக்கள். ரமண பகவான் நாற்பது வருடங்கட்குமுன் னன்புடன் றமக்கருளிய வருண்மொழிகளை யதிக சிரத்தையுடன் தமிழிற் றிரட்டி வைத்ததா லிப்போது ரமணமறை யென மதிக்கப் பெறும் 'நான் யார்' என்னும் நூல் தமிழிலும் இதர விந்திய மொழிகளிலும், அயல் நாட்டுமொழிகள் சிலவற்றுங்கூட வெளிவரக் காரண ராய்ப், பொதுவாய்ச் சகல வுலக மக்களின் நன்றிக் கும் சிறப்பாக ரமணவன்பர்களின் நன்றிக்கு முரி யாராயின ரிப்பெரியார். இவரால் 1937—43 வருடங் கட்கிடையி லியற்றப்பெற்ற இவ் விருத்தங்கள் படிப்பார், பாடுவார், யாவர்க்கும் பக்தி பரவசத்தை யும் பரமானந்தத்தையுந் தரத்தக்கனவா யிருத்தல் பற்றி யிங்கு பிரசுரிக்கப்பெற்றன.



ஓம் கணபதயே நம:

ஸ்ரீ

# ரமணசற்குருமாலை

1. ஆக்கைமண் புனல்தீ வளிவெளி யாதி
யகிலத்தை யறிந்திடு மென்னை
யாக்கையி லுள்ள வைம்பொறி தம்மா
லைம்புல னுணர்ந்திடு மென்னை
யாக்கையி லுள்ள வகக்கர ணத்தா
லைம்புல னினைத்திடு மென்னை
யூக்கமா யாரென் றோர்ந்துண ராம
லுலகினிற் களிக்கையிற் றோன்றி.

2. ஆக்கைநீ யல்ல வான்மசிற் சொருப
மாவையென் றறிவினில் விளக்கி
யாக்கைநா னென்னு மகங்கர மாய்க்க
வாசைநிற் குள்ளதேற் சடமா
மாக்கையன் றுன்மா நானென்ன வகத்தி
லனிசமு நினைக்கிலந் நினைவு
போக்கியாங் காரம் பொன்றிடுந் தானும்
பூன்றமா யொளிர்வைநீ யென்றாய்.

3. வானுயர் கானில் வழிதெரி யாமன்
மருளுறப் பசிமிக வருத்தக்
கானுள மிருகஞ் சூழ்ந்திடக் கருத்து
கலங்கிநிற் பவனெதி ருற்று
வானவ னொருவன் போனக மளித்து
வழிதெரித் தருளுமா றுலகில்
தீனன்பி னுற்ற திகைப்பினை நீக்கித்
தெரித்தனை ஞானமார்க் கமுமே.

4. வலையினைக் கிழித்தும் வனசரர்த் தப்பும்
வழியறி யாதள ருற்றுக்
கலங்கிடு கலைமான் போலநின் கழலே
கதியென மறுமுறை வீழக்
கலங்கலென் றபயந் தந்திது காறுங்
காத்தனை தரணியி லெனக்குத்
தலைவனு மானுய் தந்தைதா யானுய்
தற்பர ரமணசற் குருவே.

5. குருபர நின்னைப் பரவுவார்க் கெல்லாங்
கூறுவ தொரேமொழி யாகு
மொருபுழுக் கூடா முடலநா னென்னு
துனதுமெய் யுருவெது வென்று
தெரிந்திடேன் பதுவே தேகநா னென்னுந்
திரிபையா னொழிக்குமுன் னிறக்கி
லொருநல கதிவே றருளலுன் பொறுப்பே
யுடையவா ரமணசற் குருவே.

6. உடலிது தினமு முதித்துதித் தொடுங்கு
முதித்திடு காலஞ்சாக் கிரமா
மொடுங்கிடு கால முறக்கமா நானே
வுதிக்கில னொடுங்கில னென்று
மொடுங்கியு முதித்து முழன்றுபின் னழியு
முடலினை நானெனும் பிரமை
யடையின்மெய்ஞ் ஞான மன்றிமா யாதென்
றருளினை ரமணசற் குருவே.

7. ஈனசம் சார மெனுமன மூலம்
யானெனு நினைவதை விசார
ஞானங்கொண் டறவே நாசஞ்செய் யென்று
நல்லுப தேசநீ நவின்றாய்
நானெனை நாடா துலகுட னாடி
நலங்கெடி னென்னுயிர் நாத
னனநீ யென்ன செய்குவை யருளா
ரத்தனே ரமணசற் குருவே

8. உடலினி லெந்த விடத்தினை முதலி
லுளம்பிடித் துதிக்குநா னென்றே
யடங்கிநீ நோக்கி னிதயமென் றறிவா
யவ்விடத் தவ்வக நினைவை
யடக்கிடு விடாம லக்கணத் தெனநீ
யருளினை யதற்குமா றாக
மடையனந் நினைவை வளர்த்திடு கின்றேன்
மாதவ ரமணசற் குருவே.

9\. என்மன மிதயத் தழுந்திடா தின்னு
மெழுந்துநா னெனவெளி யோடிக்
கன்மமே புரியக் காதல்கொண் டலையுங்
காரண மியாதென வறியேன்
முன்வினை யெனிலம் முரண்வினை யெக்கான்
முடிவுறு மிப்பிறப் பழியின்
பின்வரு பிறப்பிற் பெறுவனோ நினது
பேரருள் ரமணசற் குருவே.

10\. அகமெனு நினைவை யாதியாக் கொண்டே
யாயுளா தியநினை வனைத்து
மகத்தினிற் கிளம்பு மகங்கொல முயல்வோ
னுயுளா தியநினைப் பானே
வகநினை வழிக்க வாசையுள் ளவன்போ
லடியனு னடிப்பனே யன்றி
யகத்தினிற் சிரத்தை யற்பமு மில்லே
னப்பனே ரமணசற் குருவே.

11\. அழியுட லல்லே னறிவுநா னென்றென்
னையநின் னருளினு லுணர்ந்தே
னெழுந்தவிப் புத்தி யிழந்திடா தென்று
மென்னையே நினைப்பதை விட்டுக்
கிழத்தன முடலிற் கிட்டிய தென்றுங்
கீழ்விழிற் கதியென வென்று
மழிந்துள முருக லவலமே யன்றோ
வழகனே ரமணசற் குருவே.

12. என்னவென் வரினு மிழிமல வுடலி
திருக்கினு மிறக்கினு மென்ன
வெந்நலி யுறினு மென்னுடற் கல்லா
லெனக்கிலை யுண்மையி லென்று
னின்னரு ளுணர்த்த வுணர்ந்தன னெந்தா
யென்னினு மிவ்வுட லோம்ப
வென்னுள மிச்சை யினுஞ்செய லென்னே
விணையிலா ரமணசற் குருவே.

13. தேகநா னென்னிற் செறியுற வூருந்
தேசமு மெனதென லாகுந்
தேகநா னன்றேற் செறியுற வூருந்
தேசமு மெனதென லாமோ
தேகநா னென்னுஞ் சிந்தையை யொழிப்போன்
சித்தமெவ் வாறவை பற்று
மோகத்தை முனியா மூடனென் றென்னை
முனிந்திடேல் ரமணசற் குருவே.

14. பாரங்க ளெல்லாம் பரன்மிசைப் போட்டுப்
பத்தியா யவன்றிருப் பாத
நேரங்க ளெல்லா நினைத்திரு வென்று
நிகழ்த்தினை குடும்பமுங் குலமுஞ்
சீருற வேண்டிச் சித்தனைந் துருகல்
சிறந்தநின் மொழிக்குமா றன்றோ
தீரமும் பொறையுந் தெளிவுமெற் கருள்வாய்
சிலம்பனே ரமணசற் குருவே.

15. எத்தனை கோடி யெண்ணங்க ளெணினு
மிறையரு ளின்றியா தொன்றுஞ்
சத்திய மாகச் சித்தியா ததனாற்
றுனெதுஞ் சிந்தியா திருப்போ
னுத்தம பக்த னுண்மையி லெனநீ
யுரைத்தனை யுறுதியா யதனைப்
புத்தியிற் பதித்தென் சித்தத்தை யொடுக்கேன்
புலவனே ரமணசற் குருவே.

16. குருமணி நீகாட் டருநெறி நடவேன்
கொடியனிச் சகநினை வொழியே
னரியுட லலனு னெனுமுணர் வளித்தா
யளித்திலை யனுபவ ஞான
மருளுடை யாண்டா னடிமையை யடக்கி
யாளுவ தழகலா லடங்கா
மிருகமென் றிகழ்ந்து விட்டிடத் தகுமோ
வித்தக ரமணசற் குருவே.

17. இன்னவா றேழை செல்வழி யெல்லா
மேகவிட் டிருக்கினீ வாளா
வென்னவா றுய்வே னேழையுந் திருந்தே
னிறைவநீ திருத்தவு பாட்டாய்
மன்னனீ யல்லால் மறுதுணை யுண்டோ
மறுமையி லிம்மையி லெளியேற்
கென்னவோ வெண்ண மியம்பிடா யுனக்கீ
தேற்குமோ ரமணசற் குருவே.

18. காத்தநீ யென்னைக் கைவிடு வாயோ
கருணையம் பெருங்கட லன்றோ
வேத்தில னென்று மிறைபணி யாது
மியற்றில னென்றுநீ வெறுத்துக்
காத்திடா திடையிற் கழிப்பையோ வென்று
கலங்குதன் மடமையே யாகுங்
காத்தருள் பவரார் கைவிடி லெனைநீ
கடவுளே ரமணசற் குருவே.

19. வரவரச் சித்தஞ் சுருங்கிடு மென்று
வழங்கினை யொருவர மெனக்கு
வரவர வென்றால் வருபிறப் பென்றும்
வகுக்கலா மொருபொரு ளன்றோ
வுரைத்தவிவ் வருத்தம் பொருந்திடா தெனக்கிவ்
வுடலழிந் திடுமுன மனமாய்ந்
தரும்பத சாந்த மடைந்திட வருள்வா
யனந்தனே ரமணசற் குருவே.

20. ஒருதனி மன்ன னுலகினிற் றோன்றி
யுவந்தெலா முதவிடு பொழுதே
யறிவுள ரவனை யடுத்துநன் குறுவ
ரறிவில னதுசெயா னதுபோ
லறிவுள வடியர் நின்பணி யாற்றி
யருளடைந் துய்வுறு கின்றா
ரறிவிலி நாயே னலைந்திடு கின்றே
னவனியில் ரமணசற் குருவே.

21\. உனதுபே ரருளி லொருகுறை யில்லை
யுறுதியி தையமே யில்லை
யுனதரு குற்றுன் சேவைநா னுஞற்று
தொழிப்பதெவ் வாறுளச் சார்பை
யெனக்குநல் லந்தப் பாக்கிய மெட்டா
திருப்பதென் றலைவிதி வலியே
யெனதுவல் வினைக ளெப்பொழு தழியு
மிறைவனே ரமணசற் குருவே.

22\. உனைச்சரண் புகுந்த தினமுத லேனு
மொருவிலே னெனதுதீக் குணங்கள்
புனிதனே நான்செய் பிழைகளை யெண்ணிப்
புலம்புவ னுளமிக வெட்கி
யுனதெதி ருற்று மன்னியென் றுருகி
யுரைக்கில னிருதலைக் கொள்ளித்
தனியெறும் பொத்துத் தவித்திடு கின்றேன்
சாந்தனே ரமணசற் குருவே.

23\. உடலினை வெறுத்து முற்றநோய் நோற்று
முயர்தவஞ் செய்திடி னல்லான்
மடமறு ஞானம் வாய்த்திடா தெனநின்
மாண்புறு சரிதையால் விளக்கி
விடுதலில் லாதி வேண்டுவ தில்லை
விசாரமே போதுமென் றுன்னை
யடிபணிந் துசாவு மடியவர்க் குரைத்தற்
கருத்தமென் ரமணசற் குருவே.

24. உன்னையொன் றீயென் றுருகிவேண் டாமை
யுத்தம நெறியென வுணர்ந்து
மின்னலுக் காற்று திதுவது கொடுவென்
றிதுவரை யிரந்தது போது
மின்னலென் வரினுஞ் சகித்தவை யெல்லா
மிதுவது கொடுவென வினிமே
லுன்னைநான் வேண்டா வரமெனக் கருள்வா
யுளத்துறை ரமணசற் குருவே.

25. ஒருபொரு ளுள்ள துணர்வெனு மான்மா
வுலகுயிர் பரமென வுரைக்குந்
திரிவிதப் பொருளின் கற்பனை தேர்ந்து
தெரிந்தவர் திகைத்திடா ரிறையுந்
தெரிகிலர் பேத மெய்யென விதிர்ப்பர்
தெரிகில னெனைவிட வுலகி
லொருவனு மிலையென் னுளத்திகைப் பெங்ங
னொழிந்திடும் ரமணசற் குருவே.

26. என்கதை நினைக்கி லென்மன நாணும்
மெடுத்துரை செய்திடில் வெளியி
னன்குநன் கென்று நகைப்பரெல் லோரு
நவின்றிடா தறிந்தநீ யென்பா
லென்குணங் கண்டா லென்னைவந் தாண்டா
யிரும்பினைப் பொன்செயு மாபோ
லென்குறை நீக்க வேற்றனை முடிப்பா
யெடுத்ததை ரமணசற் குருவே.

———

ரமண சற்குரு மாலை

முற்றிற்று

ஸ்ரீ

# ரமணதேவமாலை

1. அண்ணலா ருன்ற னடியிணை நிழற்கீ
ழமர்ந்தென தகத்தினை யடக்கேன்
பண்ணவா வுன்றன் றண்ணருட் புகழைப்
பத்தியாய்ப் பாடவு மறியேன்
வெண்ணிலாப் போன்ற வெள்ளைநீ றெங்கும்
விளங்குநின் பொன்மய மேனி
யெண்ணிநா னுருகே னெங்ஙன முய்கே
னீசனே ரமணமா தேவே.

2. விடிவது முதலெல் வீழ்ந்திடு வரையில்
வீண்மொழி பேசியே நாட்கள்
கடத்துவ னல்லாற் கடிகையொன் றேனுங்
கருதிலே னென்னைநா னுறென்
றுடையவா வுரைத்தா யொருமொழி பேசி
லுரைபல வளர்ந்திடு மென்றே
நடிப்பனே யலாதுன் னடிமையைப் போனு
னடக்கிலேன் ரமணமா தேவே.

3. பிறர்பிழை கேட்டல் பேசுதற் பேணிப்
பெரும்பொழு தழித்திடு பாவி
குறைபல வுடையேன் பிறரவை கூறிற்
கொதித்துளந் துடித்திடு கொடியேன்
சிறுசிறு பொய்கள் செப்பிடி லென்ன
தீங்கெனச் சிந்தைசெய் சிறியேன்
குறுகிநின் கழற்கீழ்க் கும்பிடு போடல்
கூத்தலோ ரமணமா தேவே.

4. பெருவய துற்றும் பிணிபல பெற்றும்
பெண்டிர்பா லெழுமய லொழியேன்
றிருமுகங் காணச் சிரித்துரை யாடத்
தேனிக ரின்மொழி கேட்க
விரும்பிடு மன்ப்பேய் விதவித மதிகள்
விளம்பியு மடங்கிடா தோடித்
திரிந்திடு மவர்பின் றீர்ந்துமா லெக்காற்
றிரமுறும் ரமணமா தேவே.

5. அன்னியர் விடயத் தகன்றிரு வெனநீ
யறைந்ததை மறந்தில னென்னு
மன்னியர் விடயத் தழுந்திடா துளத்தை
யகமுக மாக்கில னந்தோ
நின்னுப தேச நெறியினை மீறு
நீசனே னென்னினுந் தடுத்து
நின்னுடை யானை யங்நெறி நிறுத்த
னின்கடன் ரமணமா தேவே.

6. அரசியல் விடய மவனியி னிகழு
மைம்பெரும் பாவங்க ளாதி
விரித்துரை செய்தும் வினவியும் பலர்பால்
வீணினிற் கவலைக ளுறுவேன்
கருத்தையிவ் வாறு விரிப்பனே யல்லாற்
கடுகள வேனுமே யொடுக்கேன்
கருத்தனே காப்போன் காண்பயன் யாதென்
கவலையால் ரமணமா தேவே.

7. மக்களுக் கறந்தி மறமுணர் மதியை
வழங்குவ திறையரு ளன்றோ
மிக்கவர் செயலு மெலியவர் செயலும்
விமலனு மிறைசெய லன்றோ
வெக்கொடு வினையோ வினியநல் வினையோ
வெவரெவ ரியற்றிடி லென்ன
தக்கவா பலன்கள் தருவது மிறைவன்
றன்செயல் ரமணமா தேவே.

8. அடிமைநா னுனக்கென் றுண்டவ னீயென்
றகத்தினி லயிர்ப்பறக் கொண்டேன்
மடையனே னம்பி வழியெதிற் செலினு
மறித்துநீ திருத்துவை யென்று
கடையனேன் காலங் கழித்திடு கின்றேன்
கருணைசெய் தென்மன மடக்கா
யிடுக்கணோ வின்போ விட்டமே தனையே
யீந்தருள் ரமணமா தேவே.

9. எந்தநா ளேனு மிதுவது செய்யென்
றென்னைநீ யடிமையைப் போல
வெந்தவோர் விதத்து மேவிலை யெனினு
மெனதுளத் தெனக்குநீ யேயோர்
சொந்தநா யகனென் றுணர்த்தினை துரையே
தொழப்பனு யென்னையேற் றனையென்
றெந்தையே நம்பி யானுளே னேக்க
மின்றியே ரமணமா தேவே.

10. அறைந்திலை யெனினு மையநின் வாக்கா
லடிமையா யென்னையேற் றனையென்
றறிவிலி யென்ற வருந்துயர் கேட்டெற்
காறுத லளித்தநின் னன்பாற்
சிறந்தநின் றெய்வத் திருவுருக் காட்டித்
தேறுத லளித்தநின் னருளாற்
றிறன்பிறி தொன்றி னுலுமுன் சித்தந்
தெரித்தனை ரமணமா தேவே.

11. இழிகுண முடையே விழிநடை யுடையே
னென்பது மிறைவனி யறிவாய்
பிழைமிகச் சார்ந்த பேதையர் தம்மிற்
பெரியனு னென்பது முணர்வா
யிழுக்கொழி சதுர்சா தனங்களி லெதுவு
மெய்திலே னென்பதுந் தெரிவாய்
விழைந்தெனை யாண்ட வியப்பினை யெங்ஙன்
விளம்புவன் ரமணமா தேவே.

12. ஒப்பிலாப் பேரன் புள்ளவோர் தந்தை
யொருபெரும் பாவியா மகனை
யெப்படி யிசைக்கு மின்மொழி தன்னு
வியற்றுத வியான்மன முருக்கி
யப்பெருந் தன்மெய் யன்பினைக் கொண்டே
யறநெறி திருப்புவ னதுபோல்
மைப்படி யெனது மனதைநீ யுருக்கு
மாண்பனே ரமணமா தேவே.

13. என்றுனை முதலி லிறைஞ்சின னன்றே
யென்னுளங் கவர்ந்தனை யெனினு
முன்றனற் பதத்தி லுறுதியாய்ச் சித்த
முறைந்திடச் செய்திலை வெளியிற்
சென்றுசென் றலைந்து திரும்புமுன் பதத்திற்
சிறுபொழு தேனுமன் னிலதே
யென்றுநின் பதத்தி லென்மனந் திரமா
யிருத்துவை ரமணமா தேவே.

14. இருளறு சித்த சுத்தியே யில்லா
விழிஞனை யருளினு லாண்டா
யுரியனன் றெனினு முதவினை யெனக்குன்
னுயர்பிர சாதவுச் சிட்ட
மருந்தியு மதனை யன்பினே டின்னு
மடைந்தில னகத்தினிற் றூய்மை
யரிதரி தென்ற னகவழுக் ககற்றற்
காதியே ரமணமா தேவே.

15 அளித்தனை வெண்ணி றடங்கிய பையோன்
றனிசமும் வைத்திரு வென்று
விளம்பினை யாசா ரங்களை விடுதல்
விளைத்திடுந் தீங்கினை யென்றே
யெளியனேர் குடுமி யெடுத்தொரு தினநின்
னெதிருற வென்னைநீ நோக்கி
வளர்த்தலோர் குடுமி நன்றென வகுத்தாய்
வரதனே ரமணமா தேவே.

16 அடியனேர் தீய வகநெறி நடத்த
லறிந்தெனைத் திருத்திட நின்னை
யடுத்துறை நாயொன் றெடுத்தொரு மலத்துண்
டருகுற நீயதைப் பார்த்து
விடுதியிப் பழக்க மலதெனை விட்டு
விலகிடென் றுரைத்துன தாஞ்ஞை
யடியனுட் பதித்தா யந்தநாய் மூல
மாத்தனே ரமணமா தேவே.

17. பொறுத்திடுந் தெய்வம் புரிபிழை மூன்றே
பொறுத்திடா ததற்குமே லென்றே
யறைந்தனை யொருநா ளதன்பொரு ணியு
மடியர்தம் பிழைகளு மூன்றே
பொறுப்பையென் றுணர்ந்தேன் புன்மையேன் [பிறகும்
புரிந்தகுற் றங்களெத் தனையோ
பொறுமையிற் புவியிற் பெரியைநீ பொறுத்துப்
புரந்தருள் ரமணமா தேவே.

18. உன்னைநா யகனு யுற்றநாண் முதலா
வுற்றவா பத்துகண் முற்றும்
மன்னநின் னருளான் மாய்ந்தன வினன்முன்
மாபனி மாள்வது போல
வென்னுளே யிருந்த மறுமண வெண்ணம்
யானெழித் துய்ந்திடச் செய்தா
யன்னதோர் விந்தை யாற்றிட வல்லா
ராருளர் ரமணமா தேவே.

19. வருத்திடு பசிநோய் மாற்றிடப் பிச்சை
வாங்குதல் வீடுக டோறு
முருவிலா வகந்தை யொடுக்கவோ ருபாய
முணர்கென வுரைத்தனை யந்த
வருமொழிப் பொருளை யாய்ந்துநின் கண்ணே
யநுமதி யடைந்துநல் லந்த
வருநெறி மருவா தாயுளை யவமே
யழித்தனன் ரமணமா தேவே.

20. அடைக்கலம் புகுந்தே னபயநீ யளித்தா
யடுத்தபல் தடைகளாற் பெரிய
கடமையொன் றியற்ற வொணுதுளங் கலங்கக
கலங்கலென் றுருகுறிப் பளித்தா
யிடுக்கணின் பானின் னெழிற்பத மறவா
திருக்கநன் மதியெனக் கருள்வா
யெடுத்தவிப் பிறப்பி லெனையறி கிலனே
லென்பயன் ரமணமா தேவே.

21. எத்தனை தீய குணங்களென் மனதி
லிருப்பன வென்பதை நீயு
மத்தனே நானு மறிகுவ மல்லா
லன்னியர் யாருமே யறியார்
பத்திநற் சிரத்தை பக்குவ மில்லாப்
பாவியை வலியவந் தாண்டாய்
முத்திப்பே றளியென் முதல்வவென் றிரத்தன்
முழுமடம் ரமணமா தேவே.

22. வலியவந் தாண்ட வள்ளனீ தானே
வகிப்பையென் பாரங்க ளெல்லா
நிலையிதி லாது புலையனே னனேக
நினைவுக ணினைத்தந வரதஞ்
சலிமனந் தடுக்கத் தைரிய மின்றித்
தாழ்ந்ததன் குசனுய்த் திரிவேன்
றலைவன திட்டந் தன்னிட்ட மாக்கான்
குசனே ரமணமா தேவே.

23. போனதைப் பற்றிப் புலம்பிநைந் துருகும்
புல்லறி வொழித்திடாப் பேதை
யீனமில் வாழ்விங் கெய்துநா ளுளதோ
வென்றெதிர் நோக்கிநை யேழை
யானதா லுனக்கோ ரடிமைநா னென்ன
வகமிக நாணநண் ணிடுமால்
ஞானத்தென் விருப்பு நகைப்பினுக் கிடமே
நாதனே ரமணமா தேவே.

24\. தனதுசற் குரவன் றனதுபே ரருளே
தனதொரு துணையென நம்பித்
தனதுட லாவி தனமுத லெல்லாந்
தனதுசற் குரவனுக் கீந்து
தனதெனும் பாரஞ் சகலமுந் தனது
சற்குரு தாண்மிசை போட்டுச்
சொனவழி நடப்போன் றொண்டனென் போல்வான்
றொண்டனே ரமணமா தேவே.

25\. வருவது நின்றான் மறைவது நின்னால்
வாய்மையீ துணர்ந்துள னெனினு
மருவிலன் சாந்த மனமகிழ் வுற்றும
வருந்தியு நானெனக் குதிக்கு
மொருசிறு பொருளை யிழக்கினு முள்ள
முறுதுயாக் கோரள வில்லை
கருவற வகந்தை மமதைகள் கழியக்
கருணைசெய் ரமணமா தேவே.

26\. நானெனு மகந்தை நனவினி லுளது
நானது சுழுத்தியி லில்லை
ஆனதா லகந்தை யுண்மைநா னுகா
தகந்தையின் செயலுநின் செயலே
யூனுட லாதி யுளபொரு ளதனு
லுஞற்றிடு தொழிலெலா முனதே
நானெனு மதுநின் வானரு ளின்றி
நசிகுமோ ரமணமா தேவே.

27. அரசனு மீச னவன்பணி புரியு
மந்தசே வகனுமவ் வீச
னுரைத்தனை யிவ்வா றுருதின மெந்தா
யுணரினவ் வுயர்மொழிப் பொருளைச்
சரித்திடு சீவர் சரித்திடாச் சீவர்
சருவரு மீசனே யவர்செய்
கருமமு மீசன் கருமமே சமத்வக்
கருத்தருள் ரமணமா தேவே.

28. சொந்தவூ ரென்று சொந்தசொத் தென்று
சுற்றமென் றுரைத்திடு சூது
வந்தவா றறியேன் சொந்தமொன் றிழக்கின்
மனமிக வாடியே நைவே
னிந்தவா பகுத்த வின்புதுன் பெய்த
லினைமன மியற்றிடு வேலை
யந்தவன் மனமு மென்வச மன்றெற்
கடங்குமோ ரமணமா தேவே.

29. அறிவுதன் சொருப மறிந்திடா திருக்கு
மற்புத மாயையின் செயலே
யறிவினி லகில மாகமுண் டாகி
யடங்கலு மாயையின் செயலே
யறிவினி லளவி லகநினை வெழுந்தங்
கடங்கலு மாயையின் செயலே
மறையொணு மாயை யறிவுறை சத்தி
யறிவெலாம் ரமணமா தேவே.

30. உன்னைநீ யாரென் றோர்ந்துண ரெனநீ
பேருரு பதேசமே யார்க்கும்
பன்னுவை யதன்மேற் பணிந்துனை வினவிற்
பகருவை தகுவிடை முடிவா
யென்னையு முனையு மேனையர் தமையு
மியக்கிடு சத்தியொன் றுளதவ்
வன்னையின் றுளி லகத்தினைக் கிடத்தென்
றருளுவை ரமணமா தேவே.

31. உனதுட னியன் றனதுமெய்ச் சொருப
முண்முகப் படுத்தியுன் மனதை
யனிசமும் யாதென் றுய்ந்தறி யெனநீ
யாய்வழி காட்டினை யடியேன்
மனதினை யந்த வழியினி லுய்த்தும்
வசப்படா தோடுகா ரணம்யா
தெனவுனை வினவ நினக்கிலை பலமென்
றியம்பினை ரமணமா தேவே.

32. பலமிலை மனதைச் செலுத்தவுள் ளென்று
பகவனே பகர்ந்தனை முறையோ
வுலகினி லென்னை யுழலவே விட்டா
யுரைத்திலை பணிவிடை புரியென்
றலைமன மடங்க வனியசா தனமு
மருட்டியென் றருளிலை யுடலும்
வலியிழந் துளதென் மதிபல மடையும்
வழியெது ரமணமா தேவே.

33. தனையறி தற்குத் தனதுதாண் முக்யஞ்
சற்குரு திருவருள் துணையாம்
பினையொரு வழியு மிலையெனப் பேசும்
பெருமறை யாகம மாதி
யனையவா நீயு மடியவர்க் குரைப்பா
யம்முயல் வருளினுல் வரலாற்
றனையறி யறிவுந் தருமரு ளென்னிற்
றவறென ரமணமா தேவே.

34. உடலையோர் நிலையி லிருத்திட வொண்ணு
துருளுவன் கிடந்துகீழ் மேலாய்
மடமன நிலாதோர் வழியினிற் பற்பல்
வழிகளிற் பாய்ந்துபாய்ந் தோடு
முடலிது மரண முற்றிடு தருண
முற்றதோ வருகென வஞ்சிக்
கடவுளோ நெஞ்சங் கலங்கிடு கின்றேன்
காத்தருள் ரமணமா தேவே.

35. இந்ததுர்ச் சங்க மிகந்துசற் சங்க
விணைக்கநா னெய்திடி னல்லாற்
சிந்தையை யடக்குந் திறலினை யுறுதல்
சித்தியா தெனத்தெளி வுற்றே
னிந்ததுர்ச் சங்க விணக்கநீத் தெக்கா
லெய்துவன் சற்சங்க விணக்க
மைந்தனென் மனநல் வழியினிற் செலுத்தி
வாழ்வருள் ரமணமா தேவே.

36. ஊழ்வலி யென்னென் றுரைப்பனென் றேவே
யுனதருண் மழைபொழிந் திடவும்
பாழ்மன மென்னும் பாலையி லெரியும்
பாசமா நெருப்பணைந் திலதே
யூழ்வரு வழிநன் கோர்ந்திடி னென்
னேர்நிணே வேயென விளங்கும்
வாழ்வற வகத்தை மாய்த்திட நானு
மாய்த்தருள் ரமணமா தேவே.

37. அருளொடு பிரம ஞானவா னந்த
மவனியி லோருரு வெடுத்தே
யருணையங் கிரியி லமர்ந்துள தோர்பா
லவிர்தரு ரமணனென் னுமந்
தரித்ததைப் பார்த்துத் தரணியி லுள்ளோர்
சாற்றுத னரவுரு வென்று
வரைமுகிற் கண்டு கரும்புகை யென்னன்
மானுமே ரமணமா தேவே.

38. திருச்சுழி தலத்திற் றிருவவ தாரஞ்
செய்தனே சுந்தர மய்ய
ரருண்மக னுக வழகமை வயிற்றி
லடைந்தபின் னெண்ணிரண் டாண்டு
கரவினிற் றிருவா ருணேயை யடைந்து
கடுந்தவ மூவ்வரு டங்கள்
புரிந்தருண் மழைபின் பொழிந்திடு கின்றுய்
புவியுய ரமணமா தேவே.

39. தேவனே சீவன் முக்தனே தீரத்
தெளிகிலன் யாரென நின்னை
யேவவு மாட்டா யேதுநீ வேண்டா
யெவர்கணு மருளையே புரிவாய்
யாவையு மறிவா யென்னினு மறியா
யென்னவே நடிப்பையிவ் வுலகில்
யாவரு மயங்க நீவிளை யாடு
மெழிலெனே ரமணமா தேவே.

40. ஒற்றுமை யில்லா வொராயிரஞ் சுதர்க
ளுள்ளவோர் தாதையைப் போலப்
பற்றுத லில்லாப் பரமனே நின்னைப்
பணிபவர் பாற்பல விதமாய்
நற்றவ நடிப்பை நல்லறி வில்லோர்
நவிலுவர் பற்றுளை யென்று
கற்றவர் பேதஞ் சற்றுநின் னருளிற்
காண்பரோ ரமணமா தேவே.

41. எத்தனை மதத்த ரெத்தனை நிறத்த
ரெத்தனை விதவுடை யுடுப்போ
ரெத்தனை யறிஞ ரெத்தனை மூட
ரெத்தனை விதகுண முடையோர்
சித்தனே நின்னைத் தரிசனஞ் செய்வோர்
தினமுநின் னாச்சிர மத்தி
லெத்தனை விவகா ரங்களென் றிசைப்பே
னினனிகர் ரமணமா தேவே.

42. நின்னுடை மகிமை யென்னொரு நாவா
னிகழ்த்திடத் தக்கதோ நீயே
யன்னதை யுணர்த்தி னல்லது தாமே
யறிந்திட வல்லுந ருளரோ
வென்னைநின் னடிமை யெனுமுயர் பதத்தி
லேற்றினை யெவ்விதத் தேனு
மன்னதற் கருக னலனென வகற்றே
லடக்கியாள் ரமணமா தேவே.

ஸ்ரீ

ரமணதேவமாலை

முற்றிற்று.



# விண்ணப்பம்



1. அறிவினுக் கதன்சுய வுருவிளங் காவண
மதின்மய லுதித்த தென்னவ்
வறிவினின் மனதினை யிணைத்ததைச் சீவனு
யாடுமா றமைத்து மற்றவ்
வறிவுரு சீவனுக் குலகினைக் காட்டியே
யனுதின மொடுக்கி யோர்நா
ளறவழித் தவன்மய றன்சுய வுருவவற்
கவிருமா றருளு வோனுர்.

2. அற்பனுன் சரிவிடை யறிகில னிவைக்கினு
மறிந்தவை யிந்த மட்டே
சிற்பர னுமொரு கடவுளுண் டனுதியாய்ச்
சீவரான் மதிக்க வொண்ணு
வற்புத சத்திக ளவனுள ணைந்தொழி
லாற்றுவன் படைத்த லாதி
யற்பமெச் சத்தியு மிலர்தமை யறிகில
ரளவிலர் சீவ ருள்ளார்.

3. தன்மய மறிந்திடா தவித்தையாழ் சித்திலே
சடமன முதித்தி ரும்பு
பொன்மய நெருப்பினே டபேதமாய்ப் புணர்ந்
பொருளெனத் தோன்று மாபோற் [தொரு
சின்மய மபேதமா யுற்றுநா னென்றெழுஞ்
சீவனி தியைந்த சித்தே
தன்முளைப் பிடமெதென் ருய்ந்தெரித் தவித்
தானுமே மாய்ந்து போகும். [தையைத்

4. அனந்தமாஞ் சீவரு மனுதியே யவித்தையு
மனுதியே சிருட்டி யல்ல
தனியனுய்ச் சருவமு நியமிக்கு மரசனுய்த்
தலைவனுய்ச் சீவ ருக்குத்
தனக்கொரு தலைவனில் லாதவ னுய்த்திகழ்
சர்வஞ்ஞ னிறைவ னன்னேன்
றனக்குமெவ் வுயிர்க்குமெய்ச் சொருபமொன்
சாற்றுவ ருணர்ந்த முத்தர். [றேயெனச்

5. இறைவன்மெய்ச் சொருபமுஞ் சீவர்மெய்ச்
மிருக்கினு மேக மாக [சொருபமு
விறைவனே பேரரு ளாளனுஞ் சீவரோ
விழியிரு ளாள ராவா
ரிறைவன துபாதியோ காரணங் காரிய
மேமமா ருயிரு பாதி
யிறைவனின் மேன்மையுஞ் சீவரின் ருழ்வையு
மெவரறிந் தியம்ப வல்லார்.

6. பந்தமு முத்தியுஞ் சீவருக் கல்லது
பரன்றனக் கியம்பொ ணுது
பந்தமா மவித்தைசம் பந்தமில் ஞானிதற்
பரனவன் சர்வ சக்த
னந்தரி யாமியா யனைத்துயிர்க் குள்ளிருந்
தாட்டுவோன் றன்வ யத்தன்
வந்தனை செயவுயிர் மதந்தொறும் விதவித
வடிவமா யிருந்தொ ளிர்வான்.

7. உலகெலா மிறையுடல் தனக்கெனத் தனியுட
லொன்றிறை தரிப்ப தில்லை
பலவித மேனிகண் மாயையா லெடுத்துமெய்ப்
பக்தரைப் பாது காப்பான்
மலமுறு சீவனே ருடற்பினே ருடலமாய்
மருவுவன் றொடர்ந்த னந்த
மலமெனு மவித்தையற் றிடிற்பின ருடலெடான்
மகேச்சுர னருளி னலே.

8. எத்தனை சீவரிப் பொழுதுள ரென்னுமெண்
ணிறைவனே யறிவ னல்லா
லெத்தகைச் சீவனு மறிகிலன் முத்தியை
யிதுவரை யடைந்த பேர்க
ளெத்தனை யெனுமெணு மறிகிலன் மறைகளு
மிவற்றினை யியம்ப மாட்டா
வெத்திற மாவிறை யுடலுயி ரிணைக்கிரு
னென்பது மறிந்தி டானே.

9\. இத்தனு வாழ்வினுக் குரியவுட் டொழில்களை
யிறையதி லியற்று கின்று
னித்தனுக் கருவிகள் பலவுயிர் மதிப்படி
யியற்றிடும் வெளித்தொ ழில்க
ளித்திறத் தொழில்களக் கருவிக ளுயிர்மதி
யின்றெனி லியற்ற மாட்டா
கர்த்தன தித்திற வமைப்பினுற் சீவருங்
கர்த்தர்போற் றேன்று கின்றார்.

10\. சூக்குமத் தோற்றமே துலக்கிடும் புத்தியைத்
தோன்றிடா வென்னி லந்தச்
சூக்குமத் தோற்றமம் மதியெழா திறைவனே
தோற்றுவிப் பான வற்றைச்
சூக்குமத் தோற்றமன் னுயிர்க்கெலாம் பொதுவல
தூலமா முலகு போலச்
சூக்குமத் தோற்றமோ வேறுவே றாகவே
தோன்றுமெவ் வோரு யிர்க்கும்.

11\. உடலினி லுளதொரு கருவியக் கருவிநின்
றுதித்திடு நுட்ப தோற்ற
முடியினி லுள்ளுள மூளையவ் வுறுப்பென
மொழிகுவ ரொருவ ருப்பா
ருடலிலே நெஞ்சினி லுளமனந் தன்னினின்
றுதிக்குநுண் டோற்ற மென்றுஞ்
சுடருமூ ளையினொளி பெற்றவை யென்றுமே
சொல்லுவ ரொருவ ருப்பார்.

12. ஒருடற் றொழில்களுள் எவ்வுட றனிலுள
வுயிர்மதி பூர்வ மாக
நேரிடு தொழில்களுக் கேயதைக் கருத்தனு
நினைக்கிறே மாந்த ரெல்லாம்
யாருமவ் வுயிரினை யெண்ணிடார் கருத்தனென்
றேனையெத் தொழிலி னுக்கு
மாரிறை யளிமதி யலதியற் கைமதி
யம்மவெவ் வுயிர்க்கு மில்லை.

13. நினைவெனு ஞாபக நிகழிட மனமது
நின்மலன் சிருட்டி யாகுங்
கனமிலா நுட்பதோற் றங்களைக் காட்டிடு
கருவியு மவன்சி ருட்டி
யினையவை யிரண்டுமொன் றுற்றெளிர் வதுமதி
யென்றிடப் படுவ தாகு
மினையகா ரணத்தினு லிறைவனு லுயிர்மதி
யீந்திடப் படுவ தேயாம்.

14. அவனியி னிகழ்செய லனைத்துமே யிறைவனே
யாற்றிடு செயல லாம
லெவருமே சிவருள் யாதுமே செய்கில
ரிவரியல் புறங்க லோடே
யவத்தைமற் றிரண்டையு மறிதலவ் வவத்தை
டாமிறை சத்தி யாலே [யுண்
யெவையெவை காட்டுவ னிறையவை யவையய
திருப்பதே யிவரி யற்கை. [றிங்

15. உலகினை யுடலினை யுடலினி லொன்றுடோன்
றுத்துழை கருவி தம்மைச்
சலித்திடு மனதையு மெவ்வித மாகவோ
சாற்றுறு தெதிலி ருந்தோ
தலைவனுண் டாக்கியத் தனுக்களிற் சீவரைத்
தாவிணைத் திந்து புத்தி
யலகிலாத் திருவிளை யாடலைப் புரிகிறு
னவர்தமை யாட்டு வித்தே.

16. அவ்விறை சீவரி னவித்தையை யழித்தவர்க்
கழிவிலா வீட ளிப்பா
னெவ்வமில் விதேகவீ டென்றுசீ வன்முத்தி
யென்றுவீ டிருவ கையா
மெவ்வுயிர்க் களிப்பனே விதேகவீ டவ்வுயி
ரிச்சகம் பிறகு காணு
தவ்விறை யேகுரு ரமணனு யொளிர்கிறு
னறைவனென் குறைய வற்கே.

17. பண்ணியோ ருடலினைப்பரமனே யெனையதைப்
பாதுகாத் திடவ மைத்தாய்
புண்ணுறுத் தெரிநிகர் காமநோ யமைத்ததிற்
பூவையர்த் தேட வைத்தா
யுண்ணுதற் குணவினை யுடுப்பதற் குடையினை
யுலகினிற் றேட வைத்தா
யெண்ணமெத் தனைவினை யெத்தனை மூடனு
னெண்ணிட வியற்ற வைத்தாய்.

18. உறுமுடல் வேதனை செய்யுநோ யென்றுநன்
குணர்ந்துமோர் நியம மின்றி
யறுசுவை நாடியே தீனிகள் தின்னுமா
றமைத்தனை யெனது நாவைப்
பிறபல வுறுப்பையு மிவ்வித மாகவே
பெரும்பிணி யாக்கை யின்கண்
பிறத்தலுக் கேதுவாம் பலவித வினைகளைப்
பிரியமாய்ச் செயவ மைத்தாய்.

19. வளர்வுறு மாயுளும் வறுமையெப் பொழுதுமில்
வாழ்வையும் விரும்ப வைத்தாய்
விளக்கிடக் குலத்தினை மக்களைப் பெற்றிட
வேண்டுமென் றேங்க வைத்தாய்
தளிர்த்துமெய்ப் பக்திதான் றழைக்குமோ
சலித்துள மிரங்க வைத்தா [ விளியெனச்
யுளத்தினி லொற்றுமை யன்பிலா மாந்தரோ
டுறவுகொண் டாட வைத்தாய்.

20. என்மனந் தன்னைக்கா மாதிதுர்க் குணங்களுக்
கிருப்பிட மாவ மைத்தா
யென்மனந் தனதழுக் கொழிக்கவோ சுசியினை
யெய்தவோ முயன்றி டாது
துன்மனத் தீயரென் றன்னியர் தமைவசைச்
சொற்சொலத் துணிவு கொண்டு
தன்னுளே யுளரஜோ தமோகுணங் களையினுந்
தான்வளர்த் திடவ மைத்தாய்.

21. கடவுளே நீபடைத் தழித்திடு புழுமலக்
காயமோ டிணைத்தெ னைமுன்
ஞெடித்தவா றமைத்துமெண் ணிலபிணி
ஞேகவைக் கிருயு ளத்தை [தொடுத்துமே
யுடலுறு பசிப்பிணி காமநோ யொழிப்பதற்
குருற்றிடா தொற்று மையாய்
படித்தலத் துயிர்களு ளொன்றுமற் ருென்றை
பகைக்குமா ருட்டு கின்ருய். [யேன்

22. உன்னைநீ வெளிப்படை யாகவே காட்டிடா
தொளிந்திருந் தெவற்றி னுள்ளு
மென்னகா ரணத்தினு லியற்றியுன் ருெழிலெலா
மெமதுளம் வருத்து கின்ருய்
மன்னனுய் வீற்றிருந் தியாருமுன் ஞட்சியும்
வலியையு மருட்பெ ருக்குங்
கண்ணிஞற் கண்டுநின் கழல்தொழு துய்யுமா
கருணைசெய் யாத தேனே.

23. எடுத்திவ ணுரைவினு வெவைக்குமே யொரு
யிசைத்துனை முன்ன ரேநீ [விடை
படுத்திடு துன்பினு லதைமறந் திவைசொனேன்
பகருவ னதனை யீங்கு
மெடுப்பதா நானினை சுமையெலாம் போட்டொ
திறைமிசை விசார மேனை [ழித்
விடுத்துநா ஞரெனும் விசாரணை யொன்றையே
விடாதிடை செய்ய வேண்டும்.

24. எண்ணிடா தொன்றுமே யிருந்திட வேண்டுநா
 னெழும்பினென் ணங்க டாமே
பண்ணிடா தெத்தன மவைநிறை வேற்றிடப்
 பகையென வழிக்க வேண்டு
மெண்ணமொன் றெழும்பொழு தெழுவதார்க்
 லெனக்கெனத் தோன்று மாங்கே[ கிதுவெளி
யெண்ணிட வேண்டுநா னுரென வெண்ணிடி
 விறந்துபோ மெழுந்த வெண்ணம்.

25. சித்துநா னெனதுரு யாதென வனிசமுஞ்
 சிந்தனை செய்ய வேண்டு
மித்தகை விசாரணை யியற்றிடு வேலையி
 லெழுமிடை யூறை முன்சொல்
வித்தகப் படையினல் வென்றிடி லலைமனம்
 விளிவுறு மோக்ஷ முண்டா
மெத்திற வையமு மெழாதுபின் னென்றனை
 யிதுமிகக் கஷ்ட மார்க்கம்.

26. ஈசனீ ரமணனென் னுமமு முருவமு
 மெடுத்துய ருணை மேவி
மாசுறு பாவியென் மடமுறு மனதையெவ்
 வண்ணமோ கவர்ந்து கொண்டுன்
தேசுறு மலர்ப்பத மன்றியோர் துணையுமெத்
 திக்குமெற் கில்லை யென்று
நீசனே னெஞ்சினிற் பதித்தனை நினதரு
 ணீத்தநா னேத்த லெங்ஙன்.

27. அடியனேன் கஷ்டமுற் றுனதுகட் டளைப்படி
யாகநா னென்றெ ழுந்தே
யிடர்தரு மகந்தையை யெற்றிநின் னிஷ்டமென்
னிஷ்டமென் றிருந்தி டாமல்
வடவைநேர் மனதுசெல் வழியினிற் சென்றுநான்
மமதையை வளர்த்து மேன்மே
லுடலினை யோம்பியைம் பொறிகளுக் கடிமை
யுழன்றுநாள் போக்கு கின்றேன். [யா

28. நானெனு நினைவினை யாதியாக் கொண்டுநா
னுவித மாவு ளத்தின்
மானமி லாதெழு நினைவுக ளடங்கலு
மாய்வுறி னலது ஞானந்
தானுதி யாதென வுணர்த்தினை போதுமோ
தண்ணரு ளந்த மட்டின்
மோனமு மருளுத னின்கட னல்லவோ
மூத்தனே ரமண தேவே.

29. சித்தின துருவிளங் காவணந் தடுப்பவை
சித்தமு மவித்தை யுந்தான்
சித்தமே ஞாபக மறதியு மவித்தைநித்
திரையிவை சிதையு மாயின்
சித்துரு திகழ்ந்திடு மறைத்தசெல் விலகிடத்
திகழ்வுறு பானு போலச்
சித்தமொ டவித்தைநீ சிதைத்தரு ளுளதோ
சகம்புகழ் ரமண தேவே.

30, எழூந்திடு முருவநா மாதியாம் புலன்களோ
டெழுமனந் தனித்தெ ழாதே
யெழுமிது ஞாபக வடிவமாய்ச் சித்தினி
லியைந்ததோ டபேத மாக
வெழுந்திடு மொடுங்கிடு மனஞ்சக மிரண்டுமே
யேககா லத்தி லொன்ருய்த்
தழுவுநா னெனுமியல் பவித்தையாழ் சித்துமிச்
சடமனச் சேர்க்கை யாலே.

31. அவித்தையா மிருளிலே யழுந்திடு சீவருள்
ளமர்ந்துநீ யவரை நாளு
மவத்தைமூன் றுறவிதித் தருளினை யந்தமூ
வவத்தையு ணனுக்க ளுவில்
விவிதமாத் தோன்றுதோற் றங்களுக் காதியாய்
மேவுவ தகந்தைத் தோற்ற
மவித்தையாழ் சீவருக் ககந்தைதோற் றிடலுநின்
னருட்செய லன்றி வேருே.

32. அவவிருண் மயமுறு சித்தினைச் சீவரா
யாக்கினை யீச னீயே
பவக்கட லழுத்தியச் சீவருக் களவிலாப்
பருவர லளிப்பை நீயே
யவித்தையைப் பக்குவப் படுத்தியவ் வவித்தை-
யழித்தருள் புரிவை நீயே [யை
சிவமயஞ் சீவருக் களித்துசீ வத்துவஞ்
சிதைத்தருள் செய்வை நீயே.

33. உனதரு ளின்றிநா னெனதெனு நினைவொழி
யாவுன தருகு ருமல்
வினைவலி யலதுவே றேதுவோ தடுப்பது
விளங்கிடா தழுங்கு கின்றே
னெனதுளே மறைந்துறை ரமணமா தேவனே
யெனக்குநின் காட்சி தந்தே
யெனதுளந் தேற்றுக பீதிகள் போக்கியே
யெனதுவிண் ணப்ப மீதே.

34. உலகெலா மாட்சிசெய் யொருவனு யிருந்துநீ
யோங்கரு ணிறைந்தி ருந்துங்
கலங்கியுள் ளழுதுநான் கர்த்தனே காவெனக்
கதறியுஞ் செவிடு போல
வலட்சிய மாகவே யிருப்பதென் னதிசய
மழகிதோ நின்ன ருட்குத்
தலைவநின் பதமலாற் புகலிலை யெனக்கொரு
தைரிய வார்த்தை சொல்லே.

35. உடலெலா நோய்கடுன் புறுத்தினு முறுத்துக
வொடுங்கினு மொடுங்க வங்கஞ்
சுடர்விழி பார்வையை யிழக்கினு மிழக்குக
தொடரினுந் தொடர்க சாவே
நடப்பது நடக்குக வென்றுநா னினதரு
ளடியே நிற்ப தல்லாற்
றடுப்பதற் கெத்தனஞ் செய்வதாற் பயனிலை
சற்றுமே யாத லாலே.

36. சத்திய மாகவே சற்குரு வேநினைச்
சழக்கனேன் வேண்டு கின்றேன்
னெத்துய ரெய்தினு மதுவுநின் கருணையென்
றெண்ணிநான் பொறுக்க வும்யார்
சித்திர வதையுமே செய்யினு மவரையுஞ்
சீறிநான் வெறுத்தி டாம
லத்தனே யதுவுநின் னருட்செய லெனமதித்
தடங்கவு மருள வேண்டும்.

37. பொய்யினைப் பஞ்சமா பாவமென் பவற்றினுட்
புகல்வரொன் றென்று மேலோர்
பொய்யிலா தெவ்விவ காரமு மரிதுவாழ்
புவியினின் முடித்த லென்றென்
னையனே யாருமே சொல்லுவர் மறுப்பதற்
கவர்சொலை முடிய வில்லை
பொய்யரி னடுவிலே மெய்யனாய் வாழ்வழி
புகன்றருள் பொய்ய னேற்கே.

38. இளைத்தன னெண்ணிநா னெண்ணிலெண்-
ணெண்ணிடு மனது பொய்யாய் [ணங்களை
முளைத்தெழு நானென வெவ்வித விகாரமு
மூலமாஞ் சித்து ருதே
யுளத்தின தொடுக்கமே ஞானவீ டதனைநீ
யொடுக்குநா ளெந்த நாளோ
வெளியனு னறிவனோ விறைவநின் னிட்டநின்
னெழிற்சரண் சரண முற்றேன்.






39. சித்தமு மனமதி யகங்கர மோர்பொரு
டெரித்திடு சொற்க ளாகுஞ்
சித்தமே திகழ்ந்திடுங் கர்த்தனு யதன்கணே
திரிவையந் தெளிவு முண்டாஞ்
சித்தம தாடலு மடங்கலு மழிதலுஞ்
சித்தநின் செயல்க ளாகு
மத்தனே நின்பத மறந்திடா வரமெனக்
கருள்செயி னல்ல துய்யேன்.

40. என்மயம் யாவுமென் பதன்பொருள் பரோட்சமா
யென்மனத் திலங்கு கின்ற
தென்மயஞ் சின்மய முடன்மய மலவது
வுடலுமென் னுண்மை மயமா
மென்மயஞ் சீவரு மிறைமய மென்மய
மிருப்பது சொருப மொன்றே
யென்மய மாயப ரோட்சமா யாவுமெற்
கிலங்குமா றருள்க கோவே.

விண்ணப்பம்

முற்றிற்று.

---

தியாகி பிரஸ் விழுப்புரம்

திருவண்ணாமலை

# ஸ்ரீ ரமணாச்ரம புஸ்தகாலயம்

| பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷிகளருளியவை. | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம் | 0 | 3 | 0 |
| உபதேசநூன்மாலை (உபதேச வுந்தியார், உள்ளது நாற்பது, அநுபந்தம், அப்பளப்பாட்டு, ஆன்ம வித்தை அடங்கியது) — | 0 | 3 | 0 |
| அநுவாதநூன்மாலை [செய்யுள்] (ஞானசாரவிசார படலம், ஆத்மசாக்ஷாத்காரப்பிரகரணம், பகவத்கீதாசாரம், தக்ஷிணாமூர்த்தி தோத்திரம், குரு ஸ்துதி, அத்தாமலகம் சேர்ந்தது) — | 0 | 4 | 0 |
| அநுவாதநூன்மாலை [வசனம்] (விவேகசூடாமணி, திருக்கு திருசிய விவேகம் சேர்ந்தது) — | 0 | 8 | 0 |
| அருண்மொழித்தொகுப்பு (நானார், விசாரசங்கிரகம், உபதேசமஞ்சரி அடங்கியது) — | 0 | 8 | 0 |
| ஸ்ரீ ரமண நூற்றிரட்டு (ஷை எல்லாம் அடக்கியது) — | 2 | 0 | 0 |
| உபதேச வுந்தியாரும் கலிவெண்பாவும் — | 0 | 1 | 0 |
| உபதேசஸாரம் [நாகரச்லோகம் பாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பு] — | 0 | 2 | 0 |
| நான் யார்? — | 0 | 2 | 0 |
| **மஹர்ஷிகளது பக்தர்கள் செய்தவை.** | | | |
| ஸ்ரீ ரமண விஜயம் [ஜீவிய சரித்திரமும் உபதேச மொழிகளும்] இரண்டாம் பதிப்பு — | 0 | 2 | 0 |
| உள்ளது நாற்பது [அநுபந்தத்துடன்] விரிவுரை— | அச்சில் | | |
| ஸத்தர்சனம் உள்ளது நாற்பதின் நாகர ச்லோகமும் தமிழ் மொழிபெயர்ப்பும்) -- | அச்சில் | | |
| ஸ்ரீ ரமண சரித அகவல் — | 0 | 3 | 0 |
| பகவான் ஸ்ரீ ரமணமஹர்ஷிகளின் சரித்திரமும் உபதேச மொழிகளும் -- | 0 | 12 | 0 |
| ஸ்ரீ ரமண ஸ்துதி பஞ்சகம் -- | 0 | 1 | 0 |
| ஸ்ரீ ரமணானந்த ஸ்தோத்திர பஞ்சகம் -- | 0 | 1 | 0 |
| பெரியார் வரலாறு--மாணவர் பகுதி -- [ஆசிய விளக்குகள், கிரேக்கப் பெரியார் மாத்திரம்]— | 0 | 6 | 0 |
| கிரேக்கப் பெரியார் — | 0 | 1 | 0 |
| இந்திய ஸ்தல யாத்திரை மான்மியம் [2-பாகம்] — | 0 | 10 | 0 |
| ஸ்ரீ ரமண நாற்பது நாகர ச்லோகத்துடன் — | 0 | 1 | 0 |
| ஸ்ரீ ரமண மஹர்ஷி [112-படங்களுடன்] — | அச்சில் | | |
| ஷை ஹிந்தி — | 0 | 12 | 0 |

ஸ்ரீ நிரஞ்ஜனானந்த ஸ்வாமி, ஸர்வாதிகாரி,

ஸ்ரீ ரமணாச்ரமம், திருவண்ணாமலை.